உ

தெய்வசகாயம்.

அத்வைதானந்தம் ஆயிரத்துள் அடங்கிய

முதற்படலம்

# திருமுடிக்காப்பு.

இஃது

திருநெல்வேலி ஜில்லா

ஆழ்வார் திருநகரியெனவழங்குகிற

திருக்குருகூரென்னும் ஸ்தலத்தில்

எழுந்தருளும்

சித்தாதீனகர்த்தா

ஸ்ரீமத் ஞானசித்தசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது

செங்கல்பட்டுஜில்லா காஞ்சீபுரம்தாலூக்கா

கூவம்கீழ்ச்சேரி

திருச்செங்கோடு சப் ரிஜிஸ்திரார்

ம-௱-௱-ஸ்ரீ அப்பாசாமிமுதலியார்

அவர்கள் வேண்டுகோளின்படி

Vellore:

Printed at the Victoria Press,

1892.

சாற்றுகவி.

சேலம்ஜில்லா நாமக்கல் தாலூக்கா
பொம்மலபாளையம் அக்கிராரம்
ம-௱-௱-ஸ்ரீ,
சுப்பிரமண்ணியசாஸ்திரிகள்
இயற்றியது.

ௐ

గణాధిపతయే నమః.

పాండ్యదేశజ్ఞానదాత్ర్యా । తామ్రపర్ణీతటాంతికే ॥
అశ్వాతీర్ణమనైర్వల్యా । జ్ఞానవలింగపురస్థలే ॥ ౧

జ్ఞానసిద్ధమునిశ్రీమ । న్ముఖపద్మవిలాసజః ॥
అగస్త్యాదిమహాసిద్ధ । ప్రోక్తగ్రంథార్థసంగ్రహః ॥ ౨

యోగాభ్యాసబ్రహ్మతత్త్వ । జ్ఞానమార్గప్రకాశకః ॥
బొమ్మలపాళయగ్రామ । సుబ్రహ్మణ్యేనవిషితః ॥ ౩

గ్రంథోయంనామభేదేన । పదాధారప్రకాశకః ॥
రాజతాబ్దస్యమాసస్యస్సు । నామ్నా రాజమిహిరంకితా ॥ ౪

బొమ్మలైగ్రామవాసినా సుబ్రమణ్యశాస్త్రిణా
నిర్మితా ఏతే శ్లోకాః.



உ

தெய்வசகாயம்

ஸ்ரீமத்

ஞானசித்தஸ்வாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

அத்வைதானந்தம் ஆயிரத்துள்ளடங்கிய

முதற்படலம்

# திருமுடிக்காப்பு.

அவதாரிகை.

சாதனை செய்யுந்தற்குறிப்புமதில்
வாதனைதவிர் வள்ளலமர்வதுங்
காதலாகியகண்ணதுவாமெனெ
ஓதலுமறிவோடுமுறைப்பதே.

விருத்தம் நூல்.

பாராதிபூதலமுமில்லையிங்குள்ளதோர்
பகரிந்திரியக்கரணமும்
பார்க்குமிடமில்லைமேல்நோக்கமதுவாய்நின்ற
பழையமனமதுவுமில்லை.

தாராதிதாரமென்றாராயுமொருவிதச்
சதந்திரமுமில்லைமேலுந்
தொட்டேறுமிரோசகப்பூரகமுமில்லைநற்
சுழியென்றழைக்குநடுவே
ஆராதனைக்குறியவவ்விடமுமில்லை
ஆராதாரவகையுமில்லை
அன்றுமுதலின்றுமினியென்றைக்கும்வாழ்ந்திடு
மறிவானபரமவெளிதான்
பூராயமாகநின்றவ்விடம்யாவரும்
போற்றுமிடமுமவ்விடம்
புருஷனென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 1.

போகாதபுனலென்றுண்டப்பதேபக்குவம்
பொருந்துநிலையென்பர்மிக்க
பொறிபுலன்றன்னையேபோகவிட்டவ்விடம்
பொருளென்பரதுவுமன்றி
சாகாதகால்கொண்டுநிலைபெற்றிருப்பதே
சாக்ஷியாம்வஸ்துவென்பார்
சந்திராதித்தியர்களிருவரையுமொன்றாகத்
தான்சேர்க்குமிடமதென்பார்
வேகாததலையென்றும்விள்ளுவர் ஓங்கிவளர்
வெட்டவெளியாகுமென்பர்
விந்துவென்பர்நாதமாகிநின்றோங்கும்
விளக்கென்பரிதுவுமன்றி

பூராயமாயறிந்தியாவருமுழைக்கப்
புகன்றபலவுரையாகினும்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 2.

உள்ளபடியாவருமுரைக்குமிடமவ்விட
மொடுங்குவதுமந்தயிடமாம்
உலகதனில்யாவர்க்குமுயிர்போனதென்றவுடல்
ஞானியறிகுவதுமவ்விடம்
வள்ளலெனுமுனிரிஷிகள்சித்தருடன்ஞானிகள்
மறையறையுமந்தவ்விடம்
மன்னுமூலாதாரமென்றதுமவ்விடம்
வளர்சக்கரஞ்சுழல்வதும்
கள்ளமறநாசியோடபானத்துமோடிக்
கலக்குமிடமுமவ்விடம்
கருப்போடுநீலம்வெள்ளைசெம்மையாகக்
கலந்தயிடமுமவ்விடம்
புள்ளிக்கடற்குவளையாகவருபொல்லாப்
புலன்களதையும்வென்றிடம்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 3.

கண்டாகமச்சமையவேதமோ
டறுபத்துநான்குகலையாதுவல்ல
கடவுளுக்குறியதிருநீறொன்றுகோடியுங்
கருதுதிருநாமமென்றும்

விண்டமொழியதுகொண்டுமின்னமுமனேகவித
விதமானகுறிகாட்டியும்
வெண்ணீரதாய்ச்சுத்தவெள்ளையாயுள்ளநன்
விதிப்படிநடத்துமுறையும்
தொண்டர்கண்டஞ்சலிவணங்கவும்பற்பலர்
தொழிலாளர்கண்டவுடனே
தோத்திரம்பண்ணியும்தொழுதுமவருக்கொத்த
சொற்சலாமென்றவுடனே
பூண்டவிடமும்வல்லர்புகழுமிடமும்நம்
புந்தியுமொடுங்குமிடமும்
புருவநடுமென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 4.

சத்தம்பிறந்திடத்தேசகலமாமெனச்
சாற்றுமுறைதன்னைபுணரில்
தன்னையெனவேதெரியவங்ஙனேமனம்நின்ற
ஸ்தலமுமதுவதுவுமின்றி
சித்தமதனைப்பார்ப்பமென்றிடிலப்பொழுது
செவ்வையிலைமூளைபலமென்
தேசத்தில்யாவர்சொல்செவிகேட்டதில்லையா
சிந்தைவைத்தொன்றையுணரில்
சத்தமுளகண்களுந்தலக்கங்குறைவதென
சொல்லியுங்கேழ்க்கவில்லையா
தொல்லையிலநால்வனின்சூத்திரமறிந்துணர
குட்டியுஞ்சொல்லுகின்றேன்.

புத்தமுதமாகநின்றின்பதுன்பமுமற்ற
பொலிவானசிவயோகமும்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 5.

கவனஞ்செயப்படுங்காயத்தில்வாய்வுநிலை
கண்டுமதிமண்டலத்தில்
கருத்தாய்ப்புகுந்துபனிரொண்டுடன்காலையுங்
கட்டிமஹாமேருகிரியின்
தவமேமிகப்புரிந்தியானெனதேனும்பெரிய
சங்கையறநின்றுமேலே
சத்தனுததொனியரிந்துபரமானந்த
சம்புசிவநடனமாட்டின்
துவமுற்றபெரியோர்கள்நிஸ்ட்டைபுரியிடமுமது
சொல்லிறந்திடமுமதுவே
சொல்லப்படாதிந்தவைப்பமனைத்தையுஞ்
சொலவுமொருதேசிவேண்டும்
புவனப்பெருங்குமிழியாமதிற்கற்றோர்கள்
பொல்லாப்புமாகுமென்மேல்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 6.

நாரணன்முதற்கொண்டதேவருமற்றுமுள
நவகோடிசித்தரிஷிகள்
நன்மைபெறயாவர்க்குமுண்டுசெயுமளவிலா
நான்குமறையாருமிதனைக்

காரணமதென்றுமடிமுடியென்றுநடுவெனக்
காணுபலபாஷையாக
கற்பனைசெய்ததுமன்றிவைகுந்தகைலாச
கருணைசொரிதிரிகூடமாய்
ஆரணப்பிரமலோகமென்றுபற்பல
வபூர்வதிருநாமம்வைத்து
யாதினுமிருக்குமிடமேயுலகமென்றறைவதம்மதி
வ்வுலகவசனம்
பூரணமதாகமுதுமொழியதேவேதமாய்ப்
புகன்றவிதமரியாததேன்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 7.

அன்னைமலைக்குட்புகுந்துமோர்குகையிலே
யரிபுலியுமானகறடி
அளவின்றுருதோலெலாஞ்சேரக்கிழித்ததனை
யாசனமதென்றுமிட்டு
முன்னைபுகுந்தவருமூச்சைப்பிடித்தடைக்
கப்பொழுதுபலவாருமாய்
முறுமுறுக்குமந்தவாயுவைதசநாத
முழங்குவதுமாகவெண்ணி
என்னேரமும்பொழுதுபோக்கியென்றவமதே
எல்லாத்தினும்பெரியதென்
றியாவருக்குமேசொல்விதானுமன்னிலையினி
விருப்பார்கள்அய்யவையோ

பொன்னுலினைத்திடும்நற்புருவமத்தியில்ப்
புலன்களையுமேயொழித்து
புருவநடுமென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணனந்தமுதலே 8.

மனோலயப்படுமிடத்தேவாசிநிற்குமென
வையமுழுதும்பேசிடும்
வார்த்தையறியன்றியுஞ்சிவராஜயோகத்து
வகையுமறிநந்திமுதலோர்
இனமாகவேபேசுமியல்புமறிசித்துநூல்
யாதுமறியிதுகளிற்றன்
இன்பமொடுதுன்பமறிகர்மயோகங்களெவை
யென்றுமறியாதுமுணரில்
கனமாகமேல்கீழ்நடுவுமறிமண்டலக்
கதிகள்பலயாவுமறியக்
கற்பித்தவோருறையெனப்புகலுகைவல்யக்
க்யானநூலுபநிஷத்தும்
புனர்ஜனனமாக்குமாயுள்வேதமென்றதோர்
பொருளுமறியெமதுள்ளமே
புருவநடுமென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணனந்தமுதலே. 9

எதுசொன்னாலும்மிசைந்திசைந்தியாதுக்கு
மிசையுமென்மூடமனமே
என்னவனியாயமிதுயான்போதிக்குமளவி
லேயிசைந்திசைநம்பினாய்

ஓதுபரிபாஷையால்கற்பித்தமாதவத்
தோருறையுமாய்ந்திடாது
உனக்கேற்றபோக்காயருத்தமுஞ்செய்தனை
ஒழின்றுநான்சொன்னமொழியிற்
சாதனைச்சதுஸ்ட்டயமிளக்கிருயய்யகோ
தவராதுயிக்குறைத்த
சாக்ஷியாமவ்விடந்தன்னிலையிலேசிற்க
தக்கவிடமுமவடமே
போதுபோக்கும்வழிகளேமற்றயோகமிது
புக்கநாதமுமொலிக்கும்
புருவநடுவென்னுமொருபொருளாகியெங்குமாம்
பூரணானந்தமுதலே 10.

---

## அவதாரிகை.

அலையுமனத்தைப்பிடித்துமேலுள
நிலையிலிருக்கவும்நீவாவுன்னிட
உலைவுமினிப்படவேயுதவாதென
கலையையுமேபொருத்தவுங்காட்டியதே

பத்தியினாலுங்காணும்பரவசத்தாலுங்காணும்
புத்தியினாலுங்காணும்புகலுப்யோகத்தால்காணும்
எத்திசைபுகழுந்தவக்கியானத்தான்றன்னைப்பார்க்கும்
அத்திறத்தாலுங்காணும்பருட்டிருநிலையந்தானே 1.

என்புநெக்குருகப்போற்றியிறைஞ்சிடுவேதினுங்காணும்
இன்பமாம்பொருளைக்கண்டயிடத்திலுமங்கேசெல்லும்
நன்புளதுதிகளாலும்ஞாபகமங்கேசெல்லும்
அன்புருப்பெருக்கதானவருட்டிருநிலையந்தானே 2.

சாதுசங்கங்களோடுஞ்சாஸ்த்திரம்பழகியுள்ள
மோதிநிற்பதிலுஞ்செல்லுமுற்றனன்யோகத்திற்கு
சாதனைபுரிந்துநிற்குந்தகமையிலங்கேகாணும்
ஆதியென்றிடத்தைநாடிலருட்டிருநிலையந்தானே 3.

எங்குந்தானாகுமென்றவெண்ணத்தின்றிடத்தினாலும்
சங்கைகள்நீக்கிநின்றதன்மையினாலுஞ்செல்லும்[நே
துங்கியலலாடமென்றஸ்தலத்தில்நன்மனத்தைச்சற்
யங்கிருத்திடவுங்காணுமருட்டிருநிலையந்தானே 4.

இடகலையதனைச்சற்றேயிருத்தியுள்ளறிவையுன்னித்
திடமுடன்பூரகத்தைசேர்த்ததொன்றதாககூட்டி
நடமிடும்புருவமையம்நன்மையாய்நிமிர்ந்துபார்க்க
அடமதாந்தத்துவம்போய்யருட்டிருநிலையந்தானே 5.

இதயமாந்தலத்தில்நின்றுயியங்கிடுஞ்சக்கரத்தின்
பதமெனும்லலாடந்தன்னில்பருதியுமதியுமாக
நிதமிருபத்திவோராயிரத்தருநூறுகூறாம்
அதையுமேகுறைத்திடாமல்லருட்டிருநிலையங்காணே

உலகமெங்கினுமாய்ச்சென்றுவோடிடுமெனதையுள்ளப்
பலங்கொடுபூரகத்தால்ப்பழக்கஞ்செய்ததனைமுற்றும்

கலமுளகும்பகத்தால்ஞா றுருவடிவமாக்கி
அலமலப்பறையும்நீக்கியருட்டிருநிலையங்காணே 7.

ஒலியப்போலுளத்தேவுதித்தாற்கலையைக்காண
பாவனையதிலுமில்லை கரபானத்தலத்தில்
ஆவியைச்செலுத்திநின்றுவலக்கழிந்தாலுமில்லை
சேவைசெய்திருவைககூடுந்திடமருள்நிலையந்தானே 8.

மூலமென்றுரைக்குஞ்செய்திமூவிரண்டிடத்தேயென் [றும்
ஞாலத்தினுயிர்கட்கெல்லாம்நன்றெனவிருக்குமித் [தால்
பாலமாம்பருவமய்யம்பகர்ந்திடுஞ்சிவயோகத்தில்
கோலமாமறையுமன்றியுணர்சித்தநூலிற்காணே 9.

ஊழ்வினையாவும்போக்கும்உந்தியின்கமலமீதிற்
சூழதிருப்பாற்கடற்குட்டுணிவுடனிருந்தமாலைப்
பாழ்படுத்தாமல்மேலாய்பதிந்தயேழ்நிலைக்கூடத்தில்
ஆழமாம்புதரில்வைக்கவருட்டிருநிலையங்காணே 10.

பிடரியின்றண்டைக்கண்டுள்பெருங்கசடெல்லாய்நீக்கி
தடமதையொன்றேடொன்றுய்சாரிசெய்வாய்வோ [டொத்து
குடம்வளர்புருவமய்யங்கூர்ந்துஅத்தமனைப்பார்க்க
அடஞ்செயும்மாயைநீங்கியருட்டிருநிலையங்காணே 11

வசிபோற்றமதிரண்டிலொருபுரம்வெளியுள்ப்போக
நாசியின்வழியிருக்கநலமுடன்னின்னமொன்றும்

பேசியவும்திக்கும்நேர்பெட்டபறுங்கண்டொண்டிற்கும்
மாசதாய்மேலேழ்வீதியரிந்தருள்நிலையங்காணே 12.

ஜலத்தில்கஸ்த்தூரிதன்னைசெலுத்திடவதுதான்
[சென்று
பெலக்குமப்பாண்டத்துள்ளேபேசியகவர்போற்செல்
[லும்
கலக்கவச்ஜலத்தின்மேலேகண்டிடும்ரண்டும்போல
இலக்கதாப்தானர்தன்னிலிருந்திடவதுவுமன்றி 13.

அன்றியோர்பொறிவாணத்திலக்கினிவைக்கவங்கு
துன்றியேமேலுங்கீழுஞ்சுடர்விட்டெரியுமங்கு
நின்றுநாம்சாக்ஷியாகவொண்டையுமறிவமங்கன்
பொன்றியமேலம்மட்டும்போவதுவதனைப்போலும் 14

கண்டதோர்காக்ஷியெல்லாம்கருதிடலாடத்தின்மேல்
பண்டுயோம்பதித்ததீயும்படிந்துவுள்ச்சென்றுபின்பு
விண்டநற்பிடரிமார்க்கப் வீசியங்காகாயத்தில்
எண்டிசையரியநின்றுமிசைந்திடுமின்னங்கேண்மோ

ஒருபெருஞ்சுழுந்துங்கம்பிலுபாயமாய்தீயும்வைக்க
இருதலைமாணிக்கமென்றியாவருமுறைத்தவேதப்
பெருமைசேராகமத்தின்பேச்சரியாமலந்தோ
யிருட்டறைக்குள்ளே(வைத்த)வியற்கையுன்னபானப்
[போங்கே 16.

முச்சுடரொன்றுமையமுகப்பென்றுமதன்மேலுள்ள
கச்சியேகம்பமென்றுங்கதிர்மதியொண்டுஞ்சேர்க்க

உச்சமாம் புருவமத்தியென்றுமோருறையைப்பாரா
நச்சிறுப்மனதேயிங்கன்யானுனக்கென்செய்மாரோ

உனக்கென்னசொன்னுலுஞ்சற்றோர்ந்திடாதவலமாக
நினைக்கிராயென்னபுத்திநீயுயிர்பிரிந்ததாகில்
வினைப்பயன்றன்னைவெல்லவேகுமோயிதனுலுங்கள்
தனக்குளசேட்டைநீங்கித்தவஞ்செயப்புகுவாயிங்கே.

இங்குனக்கிருக்குமெல்கையான்சொலக்கேளாய்மிக்க
சங்கெனுந்தமரிரண்டிற்றன்புகுந்தண்டமுட்டி
பங்கிட்டுமுன்பேசொன்னபாதையாம்நாசியாலே
யெங்கினும்போகாமற்றுனிருக்கநற்புருவமத்தி 19.

புருவத்தின்மத்தியென்றபொருள்தனையரியாவண்ணம்
செருமாம்நெற்றியென்றுசொன்னதும்பிடரியென்ற
கருமமுஞ்சுழினையென்றகமலமுமூலமென்ற
பெரும்பெயர்யாவுமிங்கேபேசினர்முனிவர்தாமோ 20.

ஆருமென்மனமேயிங்கே
அருட்டிருநிலையமிங்கே
ஏருவன்புலன்கள்நீரா
எரித்தமுப்புரமுமிங்கே
காருத்தனென்றமாயன்
கண்ணனேடவதாரங்கள்
பாகமாயெடுத்ததிங்கே
பரப்பிரமவடிவமாமே 21.

## அவதாரிகை.

பொருத்தமாகப்பொருந்துவதுமிது
அருத்தவாசலடைப்பதுவுமிது
விருத்தராகிவிடுபட்டுப்போவதின்
கருத்துமிங்கிதுவாமெனக்காட்டவே.

உண்டுடுத்திப்புணருமின்பசையோகத்தி
லுழல்கின்றமூடமனமே
உன்னளவுமெவ்விதம்பாடுபட்டுஞ்சற்று
முணர்வில்லையென்னவிதியோ
பண்டுமிப்படியாய்ப்பராக்கினிலிருந்துமிப்
பாருலகமெங்குமுள்ள
பலவிதசொரூபமுமெடுத்திங்குழன்றபின்
பரதவித்ததோபுண்ணியம்
கொண்டுவந்ததினுலிவ்வாக்கையும்பெற்றுமொரு
கோலமானிடவனென்ற
குறியுமறியினியதிலுமின்பமொடுதுன்ப
மரிகுணரகிதமானபிரம்ம
எண்டிசையுமேபரவியிருக்கின்றபொருளுமரி
யாதுமரியென்றனுளமே
எல்லாஞ்செயக்கூடுமிந்நிடத்தேவருக
இன்பவாருதியாகுமே. 1

3.

கற்றிடும்விரங்கடமெனத்தனையதோவைய்ய
கற்பித்தனமுனக்கு
காணுகின்றுயிலேமாயாவிகாரமெனும்
கானகமதாகுமிங்கு
உற்றிடும்புலிகறடிசிம்மமுதலானபல
வோய்விலாமிருகமிதனுள்
உண்மையெனவேசேர்ந்தூன்மைமபெறுவஸ்துவை
யுணர்ந்திடாதவலமானுய்
பெற்றபுகழிதுவனாயிலென்னவோயினியெனும்
பின்னேடுவந்துமேலே
பிரமசன்னதியானலலாடந்தனிலருள்
பேணியங்கதுவாகுவாய்
சற்றுனக்குங்குறைவுவந்திடாதிதுமட்டும்
சாக்கிரதையாகியிந்த
தலமதினிலேவருகசைதன்னியமயமாகித்
தருமின்பவாரியாமே 2.

நானெனதெனுஞ்செருக்கதனில்வீழ்ந்தலேகின்ற
நன்றியில்மூடமனமே
நம்புகின்றுயிலேயுந்திதனிலேயெலாம்
நடக்குமிடமென்றுபின்னுந்
தானதையுணாக்கிராய்பின்னும்வந்தவ்விடம்
தலேயதெனவுஞ்சொல்கிருய்
சாக்ஷியெதுசித்தநூல்சாற்றுமம்முறையுமெது
சைதன்னியஞானநூல்கள்

வேனெனுமுரைக்கின் றவிதியுமெதுவாகம
புராணவேதாங்கமுதலாய்
வெளியாகயாருக்குமேதெரியவைத்தவ்
விடங்களேதுஎன் றுபார்க்கில்
தேன்மொழிக்திலகுமதிமண்டலத்தேயென
செப்புமொழியிற்கேற்கவே
தெய்வநிலையாமிதனிலின் றுவரயெங்குமாய்
சேர்ந்தின்பவாரியாமே 3.

மாடமாளிகைகூடமென்னுமொருவாஞ்சையால்
வழிதுறையுமாய்ந்திடாது
மற்றுமுளகர்மேந்திரியங்களெனுவாசலை
வால்கொண்டுவீசியோடி
ஆடவுங்கோபமெனு(மேலேறவுமிம்மலையின்)
ஆகாசமோங்கிநின் ற
அளவிலாக்காமாதியென்னுமோர்கொம்பி
லமர்ந்தெங்குமாய்ப்பரந்து
நாடவுங்காடுசேனையாடவுமங்கக்கு
நரிநாய்களோடுகூடி
நலமிலாதவைகளைதின்னவுமுனக்குறிய
நண்பனும்பிராணனென் று
வாடவுமிப்படிக்கெட்டலைந்தோடும்
வழக்கங்களுமொழிந்து
வாசிதனையேபிடித்தின்னிலைவருகலே
வளரின்பவாரியாமோ 4.

நீடித்தநாளோடெம்மோடும்பிரந்தவன்
னீசமுளதுஸ்ட்டமனமே
நின்னோடெனைப்படத்திட்டகாரணமென்ன
நீதியோவய்யவய்யோ
காடித்தெளிவதென்றாலுமிவ்வய்யத்தில்
காணுமலுண்ணுமென்ற
கதையுமரிநம்மிருவருக்குளேயிப்படிக்
காணுமிடமேயுனக்குள்
பேடித்தனம்வெளியதாயிடுமென்றியுன்
பேதமைகளும்வெளியதாய்ப்
பிரந்துநானுன்னோடுஜென்மாதிஜென்மப்
பெருங்குறைகளுமுணர்ந்தேன்
வேடிக்கையாயுனக்கென்றனக்காணியாய்
விட்டவிதமுமுணர்ந்தேன்
ணேவிபராக்கிலுளலாமலன்னிலையத்தில்
மேவின்பவாரியாமே 5.

வானளாவித்திகழுவாயுவுபோலென்னுருவு
வான்றனக்காதாரமாய்
வையகம்போலுநின்றன்வடிவமாயிதை
வரவழைத்திட்டவரும்யார்
கோனொருவன்வேண்டுமேயெங்குளானவனுருக்
கோலமெவ்விதமறியவே
கூர்ந்துபார்நம்மிருவருக்குமோர்சாக்ஷியாய்
குவலயத்தெங்கும்நின்ற

தானிதைதமினைந்திடி லுனக்கெனவைடவம்
தவரிவிடுமோதலாலே
சரமாரிபோலுமிவ்வுலகத்திேைனாடொத்த
சகசண்டியானபேர்க்காய்
தேனமுதமாயுறைத்திட்டபெரியோருறை
செப்பவிங்கொன்றுகேள்மின்
சித்தமென்றர்த்தமாமிந்திடத்தேவருக
சேர்ந்தின்பவாரியாமே 6.

ஏதுமறியாப்போலிருக்கின்றனையுனைக்
கென்னமததமோவல்லது
இம்மட்டுமோநீபடித்ததுங்கேட்டதும்
என்னோடுடன்பிறந்தும்
வாதுசெய்கின்றனையேனுனக்கிவ்வித
வர்மம்புகன்றதெவரோ
வையத்திலின்னமுன்னோடென்னையாக்கியே
வாணுளொழிப்பதற்கோ
யாதுசெய்தாலுமிங்கேசற்று மஞ்சிலே
னினியெனுந்திறைசள்நீச்சி
எம்மோடுசேர்ந்திங்கிருந்துபரமானந்த
மென்றைக்குமாகிமேலே
யாதுகொண்டேயங்கிருந்திடவும்நல்லிட
மிதுபோலுனக்குவேரோ
எந்திடமுமில்லைமுச்சந்தியெனும்லலாடத்
திருந்தின்பவாரியாமே 7

இத்தனைசளப்படவெனுலும்முடிந்திடா
தென்றாலுமொன்றுகேண்மின்
யானெனத்தோற்றிநின்றன்னுடலதாய்நின்ற
விதனையுமொழித்துநெற்றி
மத்தியில்சங்கெனுந்தாரைநேர்பிடரியின்
மார்க்கத்தினின்றுமேலே
மதிசதிரதாகநின்றச்சச்சுழன்றிடும்
வாரதிந்தின்பமுறவே
சத்திதனிலேமுழுச்சந்திரனைவைத்தருள்
தாரையொடுமெதிநீர்தனே
தன்னையென்றுளமுண்டின்னிலையிலேபுக்கி
தவசுற்றபெரியர்பாதம்
புத்தியாகப்பணிந்துன்னுடலப்பொருளையப்
பொன்னடிக்கேயமைத்து
புருவநடுவேநின்றுயிமையாதநாட்டமாய்
புநவின்பவாரியாமே 8.

உன்றலெனக்குறியதொன்றுள்ளதனதயிங்
குறைக்கின்றோம்கேட்கவே
வுருதிருகொண்டென்றேடதாகிநின்றன்பதாம்
முள்ளநிலைதன்னில்நின்று
மின்னார்கள்மாயையும்விலகியுள்வாயுவை
வெற்றிபெற்றுச்சிநடுவே
வீற்றிருந்தர்ச்சித்துநேசித்தநன்றாய்
விளக்கியன்னிலையையாய்ந்து

தன்னுல்ப்பிரிந்துவீணேசெல்லுமதியினைச்
சத்தியுடனேயமைத்து
சச்சிதானந்தமாய்சாம்பவியிலேநின்று
தாகாரவடிவமாகி
என்னாளுமாவதர்க்கிந்தவிதமாயுமுனே
ஏற்றுகின்றேகரிந்து
எழில்பெருகுசின்முத்திராக்கமாய்யவடத்
திருந்ததின்பவாரியாமே 9.

நிறைகுடமசைந்திடா தென்றமுந்யோர்களுறை
நெடுகிலுமறிந்துநிற்க
நின்றனுக்கேனிந்தமர்மமிங்குன்னையின்
நிலையதனிலேநிற்கவே
பறையனாங்தேனுள்ளபார்வையுஞ்சொல்விப்
பரிட்சைசெயவுஞ்சொன்னதோர்
பார்வைதனிலேநின்றியாவையுஞ்சமமெனப்
பார்க்கின்றபோதுதோற்றும்
வரைதனிலிருந்திடினுனக்கென்னகொள்ளையாம்
மானிலமெலாம்புகழுமே
வஞ்சமிகவேகொண்டநெஞ்சமேநான்முகன்
வரவிட்டதிந்தவிதியோ
முறைமுறைவணங்கவென்றாலும் நீபிள்ளையென
மூவுலகுமேயறியுமே
மூடமனமேயருளைநாடிடக்கதிபெற்று
முழுதின்பவாரியாமே 10.

காட்டியின்னிலந்தன்னில்க்கருத்தைவைத்
தோட்டியின்றெருமித்திடும்போதினில்
நாட்டியஞ்செய்யும்நாடகத்தோரையோர்
வீட்டில்வைத்ததுபோலும்விழித்ததே.

---

## விருத்தம்.

---

சாணேரவும்முளமுஞ்சறுக்குனென்றன்பர்கள்
சாற்றுமுரையங்குகண்டேன்
சற்றமரிவில்லாதயிங்ஙனேதமோறி
சபலிக்குமென்றன்மனமே
வாணுளொலாமொழிந்தேகிறுலென்றைக்கு
வழிதுணையில்நின்றுகல்ல
மார்க்கமதவாவைய்யய்யோவுனக்கிங்கு
வந்தவிதமிந்தமட்டோ
தோணுறபின்புனக்கனுபவத்தேயறிக
தலையாத்தருவத்தின்
றாக்குகின்றுயின்னமும்வெகுளிநீக்கவும்
சூரியன்றோற்றகின்ற
காணுமினிமேலாகிறும்முறக்கங்களைக்
கட்டோடேநீக்கிபிந்த
காலமேவந்தவுன்நிலையத்திலேநிற்க
காட்டியிங்கோதமொழியே 1.

நலபோவுனக்குமினியென்னேநம்வாராதுமே
நகட்டிப்போவதும்
ஞாயமிலைமுன்புனக்கேசொன்னமார்க்கமாய்
நடுவினிலிருந்துதுாய
வலமாகவேசென்றுமம்மையொடேமப்பனை
வணங்கிக்கொணர்ந்திருத்தி
வாசனையொழித்துமேல்நேசமுடனேநின்ற
மதிகறிரண்டேடுவே
தலமதனிலேயமரும்தாமரையதாமதனில்
சம்புசிவனுடனம்
சகஸ்த்திரமலராகுமிதுயிருபாதமுமுறையுந்
தன்னிலையில்நின்றுமெள்ள
பலம்வருகுமட்டுமித்தேகத்தைநன்றாகப்
பாதுகாத்துக்கொண்டிடும்
பிராணனெனும்வாய்வையுன்னிடமாயடக்கிடப்
பிரியமாயோது மொழியே 2.

ஒருநிமைப்பொழுதுக்குளேயிந்தவுலகெலா
மோடியுழல்கின்றமனமே
ஒன்றுகேள்யின்னிலையிலேநின்றுஜகமெலாம்
உன்வசமதாக்கிடாமல்
பெருமையிதுசிறுமையிதுவென்றறிந்துள்ளநீ
பிராணனேடிஷ்ட்டம்நீக்க
பேசுமுறைநாலுமெங்கேயுளதவர்தோ
பேசரியசித்தரிஷிகள்

அருமையுளநிஷ்டையோகங்களுமனேகமாய்
யாருக்குமெத்தவிதமாம்
அதனையறியிங்குனக்கிதுநல்லபாதை
யலாதுசும்மாநின்றிடத்
தருமமெனவேஞானநூலினுரையிங்கிதைச்
சாற்றுவனதொன்றுகேண்மின்
தக்கமனமேயிரண்டற்றிருப்பனவதாய்
சாற்றிவருமிந்தமொழியே 3.

தானாருதன்னையுண்டாக்கினோனெவ்விதம்
சற்றுணர்ந்திதனையறியுஞ்
சாக்ஷியதுவாய்நின்றுசகமெலாமானதொரு
சைதன்யமாவதென்ன
நானாருமுன்னிடத்தேவந்துபலவாரு
மாய்ப்புகல்வதென்னவென்றுன்
நற்பதியிலேநின்றுகணநேரமாயினும்
நகோடியூடசென்று
கானாறுவைச்சென்றமோகவொருபாலமாய்க்
காணுகின்றதனிலுற்று
கதலிவனமும்கடந்தங்குசென்றிடுகவோர்
கனவாயுமிங்குமுண்டு
மானார்களாசைசென்றோடுமிடமுமவ்விடம்
வகைவகைவிதங்களாக
மாரும்விடமுமவ்விடம்வந்துநீபார்க்கவென
மருத்திங்குமோதமொழியே. 4.

மாயாதகத்தொழிலதேயென்றுமேபுரியும்
வஞ்சமுளநெஞ்சமேகேள்
மாமாயையென்றுனக்கேயுரியதாயுனுட
வார்த்தையிற்குள்ளாகியிங்
காபாசமேபுரிந்துன்னுடனமர்ந்திடு
மடியனையுமேயிழுக்க
யான்பெற்றபேருமிம்மட்டோமனத்துடன்
என்னேரமும்வழக்கோ
சாபானுசாரமோவய்யகோவேதனேன்
றலைவைத்ததிந்தவிதியே
தயைவைத்துநான்சொலும்வார்த்தையைக்கேட்டருட்
டகமையினிலுரவுமாகி
மூவாதசித்திகளெல்லாம்விளைக்கத்தரும்
முக்கோணவீதியென்னும்
மூக்குமுனையாகுமண்ணுக்கெனும்பிடரிவர
முத்தியெனவோதுமொழியே. 5.

சொல்லாதுசொல்லியேகுகூத்தைவிள்ளவுந்
துருவசக்ரகோட்டையின்
தோற்றமுமொடுக்கமுந்துரியாதீதந்தனில்
டுலகக்குமின்னமுள்ள
பொல்லாப்புலங்களைப்போக்கவும்மேலுள்ள
புண்ணியத்தலங்காணவும்
புருவகடுவென்னவுமிங்ஙனேபுரியட்ட
போகசிவயோகவென்றும்

வல்லோர்களெல்லாம்பணித்திட்டவிடமென்றுமேல்
 வாய்கொண்டுபேசமுடியா
வற்றமிடமும்மயிர்பாலமுமீதேற
 வட்சுநரத்தியல்புசொலவும்
எல்லாமெனக்குரியதோழனுயாவையென்
 றெவ்விதம்பாடபேட்டும்
இழுத்தன்னைவைத்தினும்வோடவிங்கேற்குமோ
 வென்றுபின்னுறைக்குமொழியே 6

உன்னலலோவெனக்கிந்தவுடலும்வற
 வொத்தாசையாச்சுதிந்த
உடலோடு வாழ்க்கையிற்குள்ளாகநம்பெறு
 முண்மையுங்கண்டுகொண்டால்
என்னுளிலேயிறும்யேகட்டுமென்றியுங்
 கிருக்தாலுமிகலல்லதே
இனியுனக்கேசொல்வதொன்றுமில்லையேயிங்
 கிருக்தபடியில்லுமேலே
தன்னுவியங்கிடுஞ்சந்திராதிசூரியர்கள்
 தன்மேலுமாகாயமாய்
சஞ்சரிக்கும்பெரியவுலகத்திலுள்ளபல
 சத்தாதிஜீவராசிய
இன்னமுமுமக்குறியவென்மேலுமுன்னுள்ள
 பிண்டனும்பிராணனேறும்
யாதிறுக்குஞ்சாக்ஷியாணையாயிங்கிரு
 வெனப்புகன்றேதமொழியே 7.

இத்தனைக்குஞ்சற்றமெண்ணிலாதவலமா
எங்கினும்போகவெண்ணி
இருக்கின்ற புத்தியிம்மட்டோடடக்கி யென்
னிருகண்ணிலொன்றுபோல
முத்திரைக்குள்ளாகியிங்குற்றிருக்கவும்
மூர்க்கர்துலேத்துயெந்தன்
முன்னின்றுநான்போகுமுனனமங்குற்றுமேல்
முழுதுநீயாகிடாமல்
பித்தரைப்போலுமிங்கேசுழன்றலேவதும்
பின்னேடுசான்வருகவும்
பேய்த்தனமதென்றுநம்போலொற்றவன்பர்கள்
பேசவுமதுகண்டுநாம்
சித்தங்கலங்கவுமென் செய்வமென்றுநந்
தீவினைகளைநண்ணவும்
திரும்பவும்பழையபடியேயாகிமாளவும்
சிறல்லவென்றமொழியே 8.

கிருமியைக்கிண்டியதிலேயுள்ளதுர்மலக்
கேட்டிறறிகைத்தவண்டை
கெவுனமுடனிங்குவாவென்றெடுத்தேயதைக்
கெங்கையிற்முனமாட்டி
பெருவையுருசெந்தாமரைக்குளூறதேன்றனே
பிரியமாயுண்ணுமென்று
பிடித்துவிட்மெங்குபழையபடிசாகலில்
பிரியமாயானவிதமாய்

சிறுமையதிலாகிருபானிதர்க்கென்செய்த
திருவுளச்செயலுமெதுவோ
தேகமதவுஞ்சித்தியானதோவப்பவுந்
திரும்பிவரமார்க்கமுண்டோ
அருமைகெட்டுப்போவதும்மல்லதாயின்ன
மாருனக்கென்னையன்றி
ஆதலாலும்முன்னமாணையிட்டதினாலும்
மம்மெனச்சொன்னமொழியே 9.

கர்மேந்திரியத்தலைவரொன்றுனக்கோர்பிள்ளை
கண்டதையெல்லாம்பொறுக்க
கட்டுகட்டாக்கியுந்தலைமீதிருத்தியுங்
காணுதபின்னுமந்த
நிற்முடர்பின்னேடுசெல்லவுமங்கங்கு
நேரில்வருபொருள்களெல்லாம்
நேத்திரத்தால்காணவுஞ்சப்த்தப்பரிசரச
நினைவாலுழன்றுபின்பு
தர்மமது வென்றுளத்தேநினைத்தலுமெனைத்
தன்னேடுசேர்த்தபின்பு
தனென்றகண்டதேகாட்கூடியதவாமெனத்
தாரணிக்குள்ளாகியே
மர்மமதுவேகொளமாமாயையென்றவள்
வளர்த்திட்டதாயினேடு
மனமுமகிழ்க்கொலுவீற்றிருக்குந்துஸ்ட்ட
மார்க்கம்விடுவென்றமொழியே 10

அவதாரிகை.

விளிக்குள்நின் றவிழக்கைகருத்தினை
ஒளிக்குள்நின் றலாவிடுமுண்மையை
வளிக்குள்னின் றுமறித் துடும்வாயுவை
யளித்திடாமலிவ்வாக்கையிற்சேர்ப்பதே

---

ஆக்கையெனுமொருபொம்மைதத்துவந்தொண் ணூற்றி
யாரதாய்நின் றததனுள்
அஸ்தியொடுமாமிசம்நரம்பினுடனேசர்வ
மானரோமமேமாட்சையும்
தொக்கென் றஸ் தூலசடமாகுமிதனிற்சொ லுஞ்
சூக்ஷசடம்நாலாரு தாய்ச்
சொல்லுமறைஞான நூல்சத்தா தியைந் துடன்
றேற் றுவசனாதியைந் தும்
பக்கமதிலேவருங்கரணம்நா லன் றிப்
பகர்பிராணன்பத்துடன்
பார்க்கவருகண்டத்திலேநிற்குமாமிதைப்
பார்த்தபின் னிருதையத்தில்
சேர்க்கையதுவாஞ்சுழுத்திப்பதியிலேநாபி
சோர்ந் துவாவதந்தயிடமாம்
தெய்வஸ்தலமுமென் றியாரும்புகழ்ந்திடந்
திருவாரூரென்றமுதலே 1

அறிந் துனக்கேசொன்னவாரூரிலேநின் று
அத்வைதநிஸ்ட்டைபெற்று

அறிவினாலேதன்னையாமொன்றறிந்திடு
மந்தவிடமேதுரியமாம்
செறிந்தபடியாமட்டுமோகிசிற்போமதைச்
செப்பவும்நாபியென்ற
செந்தாமரைக்குளேநின்றுபரமானந்த
தேசிகனையன்பினாலே
பரிந்துபூசிக்குமிடமாமிதேமூலமாய்
பாரிலுள்ளோர்புகலுவார்
பக்குவமதாயங்குநின்றநிலைதன்னிலே
பிராணனென்றேமிச்சமாய்
தெரிந்தபூரணவின்பயானந்தமயமாகி
தேட்டமற்றின்பவடிவாம்
தெய்வஸ்தலமதென்றுயாரும்புகழ்ந்திடத்
திருவாரூரென்ற முதலே 2

முதலானபொருளுமிதுமுடிவானபொருளுமிது
மூலவக்கினியுமிதுவே
மும்மூட்சையென்றிடமுமிதுமுத்தியினுக்காதார
முழங்குமறைசொல்வதிதுவே
இதமகிதமாவதேஆத்மாவினிலயமினி
இந்திடம்தன்னில்மெல்ல
இருந்துபரமானந்தசுகசிவமுத்திநிலை
இருந்தென்றுமிகவாழ்கவே
பதமாகிப்பிரகிருதியாவுமிங்கென்றருள்
பழக்கமிகவாகிநின்றால்

நிலன்பெருகலாகுமேலானந்தவீட்டினும்
படியலாமவத்தையைந்தும்
சதமானநெற்றிநடுவுண்ணாக்கில்நிற்குமேல்
தான்சொல்லநீதியுண்டோ
தன்மையுணர்பெரியோர்களுண்மைபெறநின்றிடந்
தக்கதிருவாரூரதே 3

மொத்தமானந்தமயமெட்டுவிதமாமென
முழங்குமறைதன்னையுணரில்
மூடவனிதாதிவிசையத்தினுலுளலாப
முன்பறிவதொன்றுபின்னும்
நித்திரையினுலடைகின்றவானந்தமது
நீங்கியும்நீங்காமலே
நிற்குமிடமொன்றதுளஸ்தானுதனப்பிசகில்
நீங்கிடுமூபேட்சையரிவில்
அத்தில்வருவனதொன்றுயோகாப்பியாசமதி
னுலுள்ளநிலையில்மனமும்
அடங்குகின்றிடமதனிலடையுமானந்தமது
யாதினுமேயதிகமாம்
இத்துள்வனிதாதிவிசையமத்தியினிலே
யினிப்பிரியாத்மாவென்றதில்
எய்துமானந்தமொன்றிதுவேயாத்மானந்த
யின்பமுருமாரூரதே 4.

5.

ஆதியாயாவுக்குமாதாரமாய்மற்ற
வத்தைகட்கோர்முடிவதாய்
அகிலாண்டகோடியுந்தன்வசத்தேவைத்து
வரிவொன்றேதமக்குள்
நீதிபெறவுங்கொண்டுதான்சத்தியமென்றறிவில்
நிற்கவானந்தமொன்று
நிலைபெற்றிருக்குமதுவேயத்வைதானந்த
நிற்கும்மிடமும்துரியமாம்
விதிபெறவேசகலலோகாதியாவையும்
விதித்திட்டவேதனோடு
விதேகமேனாமகளதாகிஅத்தாமனா
மேலொற்றிருக்குமந்தச்
சோதியேபரமண்டலம்புகுந்தின்பமாய்ச்
சொல்வதற்கேதுவான
துரியமனமேவித்தியானந்தசமயமெனச்
சொல்வாராணைக்காவிதே 5

வித்திவிசைபிரம்மவாசனுமுக்கியவானந்த
விவேகபரிநிசானந்தமும்
மிவற்றொடாத்துமாவத்வைதானந்த
நிலைகண்டுபிவைமுணர்ந்தவப்பால்
புத்திநிலையுணர்சவாசக்குழலின்வாய்மையின்
புன்மையறிவுள்ளிருக்கும்
புகழ்ச்சத்திகுண்டலியமைந்தவப்புதுமையைப்
புகழ்பெறக்கண்டுமேலே

பத்திநிலைகண்டுமுச்சந்தியினிலமுத்தி
புதிந்தயிடமுஞ்சுழுனையில்
பற்றியுறுபிராணபானத்தலத்தோற்றமும்
பண்புபெறவுங்கண்டுமெங்
உற்றபானன்றனையிழுத்துமிப்பிராணனோ
டொன்றாயிணைத்துமிக்க
ஒழுங்காகவேநின்றவாசலின்வழியாய்
யுள்புகுலானைக்காவிதே 6

யாவினுக்கும்மகாமேருவென்றோர்கம்ப
நடுவினில்மூலமுடிவில்
நன்மைபெறவேயுரைந்தாணிவேரோடியே
நடுநாடியூடுசென்று
தாவிநிற்குமிதில்சந்திராதிசூரியர்கள்
தானுதிக்கின்றயிடமாம்
தன்மையுணருண்மையோர்வுண்மைபெறவேகண்டு
சன்யதானத்திலுற்று
பாவித்தமும்மலமதாகுமுப்புரமதைப்
பற்படப்படுத்தி
பனிரெண்டுகொலுள்ளவாகாசப்புரவியாம்
பஞ்சகல்யாணிமீது
நாவிதனிலேநின்றுமனமெனுஞ்சினிமேற்
நன்மையுடனேரிமேலே
நாதாந்தநிலைகாணவேதாந்தவுந்தியில்
நாடுமென்னுமலையிதே 7.

மலையுமிதுமரகதக்கதவினுற்சாற்றுமவ்
வாசலதுவுஞ்சுழினையாம்
வற்றுச்சமுத்திரமதேழுமிங்கேசுற்றி
வளைந்திருக்கும்மத்தியில்
நிலையதெனுமுதையகிரிதன்னிலுளசூரியன்
றத்னமெனுமாரதத்தில்
நீங்காமலேயந்தமாமேருவைவலம்
நித்தமுஞ்சுற்றிவரவே
கலையதெனுமாமதியுள்புகுந்திடாவண்ணமே
கால்கொண்டப்பானன்றனை
கட்டியொன்றாக்கியேயோகநித்திரைசெய்த
கரியமாலுற்றவிடமும்
தலையதெனும்பூமிபாரத்தையேநீக்கிட
தானறுத்தேகுவித்து
தலமுமிதுவேகுருக்ஷேத்திரமதாமெனச்
சாற்றுமண்ணுமலையிதே 8

தேசுநிறையுந்தியிற்றெற்பாசனத்திலே
ஸ்ரீமராமனன்றுபுக்கி
சிலத்தரசனுருமவ்வபானன்றனைக்காண
சென்றுகாளோதாக
யோசனைசெய்தேயந்தவீணுத்தண்டினடியில்
ஒங்காரமானபாணம்
மொன்றெடுத்தேவிட்டுக்கொண்டுவாவென்றிட
ஒருநிமைப்போதினுள்ளே

பாசக்கடற்கிணையதாகுமவ்வபானனும்
பதரித்துடல்நடுங்கி
பருதியொப்பாகுமணியாயிரங்கைகொண்டு
பாதகாணிக்கைவைத்து
நேசமுடனேயென்றன்முதுகிலேகல்லணை
நிமிசத்திடுங்களென்று
நின்றுதொழிகின்றசெந்தியெனும்பதியிலே
நிற்குமண்ணுமலையிதே 9.

மனதுற்றபிரணவக்கம்பமதின்வாயிலால்
வாயுவைக்கொண்டெழுப்பி
வடிவுற்றகருவியொருமூன்றினால்காரண
வஸ்துநிலைதனையுணர்ந்து
நினைவுற்றவூமனார்கண்டகனவாமென
நிறைந்தெழுசுழுத்திதனிலே
நிற்குமப்பிராணனோடபானனுஞ்சரியென
நிறுத்தியன்னிலையையாய்ந்து
கனலுற்றமூலமதிலேவபானன்செலக்
கட்டியப்பிராணனோடே
கணநேரமாகினும்பிசகிடாநின்றருள்
காவலிலுறைந்தபின்பு
நினவுற்றயிருதையக்கமலமயலட்டதள
நேர்மையைக்கண்டுகொள்ள
நிற்குமந்தரியாமிசகிதனாயானந்த
நிறைசிதம்பரமூர்த்துவே 10

பரமுமிதுபாதைவெகுகடினமிதனைச்சுற்றி
பார்க்கவென்றுலகினில்
பருதியொருகோடிபோல்சோதியதினவேலை
பிராணலயமாவதிதுவே
திரமுமிருகாரைக்காலம்மையென்றோர் பெண்
தேமதையுதரிமிக்க [ணின்
தெய்வீகருகூதேகத்தோடுவெச்சித்
திருச்கையிலைதன்னில்வரவே
சரபவாலங்காட்டில்வந்துசேர்நடனமுந்
தான்கண்டுகொண்டபின்பு
தன்மையமதாக்குவோமின்றுநீசெல்லெனச்
சங்கரனுரைத்தமொழியின்
வரமுறுதிகொண்டுதாம்வந்தவழியேவந்து
மன்றினில்கருவியெல்லாம்
மாய்த்துமாசானமதிலேயிருந்தப்பனை
வணங்குதில்லைப்பதியிதே 11

பதியுமிதுநாரதப்பிரமாதிதேவரும்
பக்திசெயுகின்றயிடமும்
பரலோகசாதனமளிப்பதற்கேதுவாய்ப்
பதிந்தயிடமும் விந்துவில்
தியானதாறமுதமூட்டவும்
சுந்திரகலைவெளிவிடாதேபார்க்கவும்
வெண்புட்பராகமரிபச்சை
வைவிரீயம்வேண்டுவரத்னவொளிபோல்

உதிக்கின்றசெங்கதிர்களொருகோடிபோலவும்
முறைந்ததலம்பின்கலைக்
உறுதியாய்ப்பவளநிறமுற்றயிடகலையினி
லுறைசத்திசிவமமென்ன
புதியமேல்வீதிசெல்கின்றகல்யாணியிற்
புக்கிக்கனிந்துவெற்றி
புகழுமச்சிறுவாசலைக்கண்டியாரும்
போற்றுதில்லைப்பதியிதே 12

இந்திரன்முதற்கொண்டனந்தபலதேவரும்
மிருக்காதிமறைமுனிவரும்
எழில்பெற்றமோட்சாம்பராச்சியமாய்
என்றைக்குமின்பவாருதியிலுற்று
மந்திரமாலிகையாலும்யோகானுபூதியின்
வாசனையதன்றனாலும்
மனதடங்கிப்பணிந்தேற்றமிடமும்
மலமகந்தை போய்ச்செல்லுமிடமும்
நந்திமுதலளவற்றசித்தகோடிகளெல்லாம்
நாடுமிடமுங்கருணைசேர்
நாடிகளெலாமொடுங்கின்றயிடமும்
பிராணநக்குறந்தனையென்றும்
சிந்தபானன்வழிவிடாவணஞ்சேர்ப்பதில்
திரும்புயிடமுஞ்சுழிமுனை
திகழுமிடமும்சுவாசப்பையறுகிலேவுற்ற
திருத்தில்லையம்பதியே 13

அருள்பெற்றநந்தன் முன்னப்பதியிலேவாருக
வந்தணர்தஞ்சிந்தைமகிழ
அக்கினியிலேமுழுகியளவற்றகாட்சிபெறு
மச்சமையத்திற்கூடவே
மருளுற்றதங்கனேமாயனொருரிஷபமாய்
மறைத்துக்கிடந்தவிதமும்
வடிவுற்றதர்க்குமேல்நடனமிடும்வஸ்துவின்
மலர்க்கருணைவிழியமுதினால்
திருவுற்றநந்தனிங்கேவருவதாதலாற்
சீக்கிறமுமாயைநீக்கி
தெரிசனமதானபின்னங்கமர்வதென்றுநம்
சிவனுரைத்திட்டமொழியும்
கருவுற்றமுப்புறத்தையொளிக்கேகையில்
கரியமாலேவிடையதாய்க்
காணுமிடமும்மனுகதமெனுமபதியதங்
கருதுமித்தில்லைவனமே 14

வருவுற்றதில்லையம்பதிமேவிமாநடன
வஸ்துவையுணர்ந்துமப்பால்
வங்கென்றெழுந்துமேல்மூலமதினக்கினியின்
மத்தியிலெழுந்துசென்று
கொலுவீற்றிருக்குமொருதமருண்டமெண்டலக்
குறியந்தங்குசென்றால்
குணம்ரெண்டேகூடியொன்றாயிருக்குமிதன்
குறிநிலைவண்ணமாகும்

சிலுகுற்றசத்திகளனந்தமாகோடியத்
திரைகளுமனந்தகோடி
சிவகிருபையல்லாதுவதனிலேசென்றிடத்
திரமெவர்கமெங்குமில்லை
மலிவுற்றதுரியமதின்வ்விதமயக்கமும்
வந்தணுகுமதியோடுசேர்
மாத்திரையதைக்களித்தங்கு சென்றேறிடம்
வளர்திருக்காளத்தியே 15.

அத்தியென்றிடுமத்தகத்தோலுரித்தநம்
மரன்கையிலேமலையதனையே
அடியோடெடுத்திடவரக்கன்முடிபத்து
மதிர்ந்திடச்செய்யுமிடமும்
நித்தியவைராக்கியதிருஞானசம்பந்த
நிகரில்வெண்விடைமேல்வரும்
நிமலனைக்கண்டவிடமும்தூண்டியேயரன்
நேராகநின்றயிடமும்
சத்திகளெளாமுதிக்கின்றயிடமுங்கருவி
தழைப்பதர்க்கொறற்யிடமும்
தான்போலும்நாளுவிதஸ்வவரூபத்துடன்
குழுமிடமும்தமருளே
பத்திடாதோடும்அபானன்றனைக்கட்டிப்
பார்க்குமிடமுங்கண்டமாம்
பழையவிடமும்மெலாம்வினையுமிடமுமிங்கன்
பகர்திருக்காளத்தியே 16.

தியானமுதளளவற்றபக்திவிசையத்திலே
செலகின்றமாதவர்க்குஞ்
சிந்தையிலனந்தவிதரூபமதுவாகியத்
திரையொழிக்கின்றவிடமும்
அயனரிமுதற்கொண்டருத்திரர்கள்முதலான
வளவில்பல்தேவருக்கும்
அப்புறத்திருளந்தகாரமாய்க்கம்பமதி
நந்தமாய்த்தொண்டைமுட்டும்
பயமுற்றவக்கினியிருண்டபோலமோ
பகருரோமம்போலவே
பார்க்கமுடியாததைப்பற்றினல்வெகுசித்திர
பான்மைவடிவாய்மறைக்கும்
மயலற்றுமாயயின்செயலற்று
வாசனாதிதமுமற்றுமேலே
வாழ்பவர்க்கருள்கூருமகேஸ்பரபொருளமர்
மகிழ்திருக்காளத்தியே 17.

காளத்தியாகுமிம்மலையிலொருநாள்முனங்
கண்ணப்பர்வந்தவிதமும்
கருநிலமயமானத்திருவருட்காணவக்
கக்குலில்வழிவிலகவே
கோளற்றஞானேந்திரியங்களெனும்மான்களை
கொன்றதினிறைச்சிதன்னை
குணமாகவேயெடுத்தவிர்ப்பாகமியவும்
கொழுந்தவிட்டெரிமூழ்கவும்

நீளுற்றகாரமாந்தமர்வழியினூகவே
 லிங்கவடிவினையுணர்ந்து
நிலையுற்றதன்வலக்கண்ணுனபிராணனையவ்
 விலிங்கமதனிற்சேர்க்கவும்
தாள்வுற்றிடக்கண்ண தாகுயடாணனை
 தானெடுத்தெசேர்ப்பதாம்
தருணத்தினுள்ளிமூத்தேகாந்தமாகவுந்
 தழைத்தருங்காளத்தியே 18

எணம்பெருகுமப்பிடரிமுடிவிலொருசங்கென
 விருக்கினறதமரிரண்டி
செல்லவழியாகமேலேரிவன்போதினி
 விருகண்ணிலும்பின்னலாய்
வணம்பெருகுமக்கபாலத்திமுக்கவராதாய்
 வளர்சுழினைபோலாகவே
வர்னமோபவளநிறமாகியண்ணுக்குக்கும்
 வடிவுறுசெவிக்குமாக
பிணங்குருபிராணபானத்தலத்தோற்றமும்
 பேசுதுரியாதீதமும்
பெட்புறுசிவானந்தநிஸ்ட்டையின்மூலமிது
 பேருநற்சாக்கிறமதாம்
மணம்பெறுகுமிப்புருவமத்தியென்றதுமூல
 வக்கினியின்வடிவமாகும்
மறையாகமத்துளேவகுத்தநற்காசியின்
 வடிவிந்தவண்ணமாமே 19

மாமேர்வினுச்சியிதுமதிமண்டலங்களிது
வளர்திருக்கையிலையருகே
வடிவுற்றதேவகணபூதவேதாளகண
வானவர்கள்பலகோடியே
தாமோதரான்முதற்கொண்டபலகர்த்தருஞ்
சண்முககணேசன்முதலோர்
சண்டப்பிரசண்டவயிரவர்களுடனட்டதள
தாமரையினடுமையமாய்
பூமேவிடுஞ்சதாசிவமனோன்மணியருட்
பூங்கழலிரண்டினுக்கும்
பூசனைசெய்தேநாசிநுனியதனில்நடனமிடும்
பூரணானந்தவள்ளல்
பாமேவுநாவினுக்கரையர்பால்பற்பல
பான்மையுங்காட்டிநின்ற
பரமேசநிற்குணசதாசிவப்பொருளதும்
படிந்தவிடமிக்காசியே 20.

மிக்கனன்னிலையினுக்காதாரமானதிது
மேலேந்துவர்ன்னமாக
விதமாகியேநடிக்கின்றநாதாந்தமாய்
விண்டனிற்சோதிவடிவாய்
செக்கச்செவந்தநற்பவளவடிவாகின்ற
திருப்பதமிரண்டிலொன்றைத்

திருப்பதோமுகமெனவுமூர்த்தமுகமாகவும்
திருநடனமாடுகின்ற
சொக்கனாசோமசுந்தரிகணவனார்தனைத்
தொண்டர்கண்டஞ்சலிசெயும்
சுவாமியைக்கண்டமாபுரியுனுக்கெதிரில்வளர்
சோதியைக்கண்டடிதொழ
திக்குத்திகாந்திரமெலாஞ்சுற்றியந்தோ
திரிந்தலைவரிவ்வுலகினில்
தீர்த்தயாத்திரைகளெனகால்கடுத்தோடுவர்
திருக்காசியம்பதியிதே 21.

பதியெனும்புருவமதனடியதேனவேகாசி
பகர்கங்கையெங்குளதெனிற்
பரமசிவனார்முடியின்மேலுளதுவென்பமப்
பரமரெவ்வடிவமென்னில்
நதிஉகரமாமதேசத்தியாம்விந்துவி
ன்டுவினிலிருக்கும்வித்தை
நாதனாகரவடிவாகியம்முடியிலே
நன்முகவைத்ததென்றேம்
புகிதெனவுமக்கெங்கைமுடிமேலிருக்கவும்
பொருந்துமோமுழுகவென்னில்
புவியிற்பகீரதன்செய்தவப்பயனதாற்
புனல்ப்புவிவிழுந்ததென்போம்
மதிதனக்கின்னருளெனப்புகன்றத்தமு
மதிமுடிவிலுற்றவிதமும்

வையகமறிந்ததேயென்றிடில்காசிநகர்
வர்தமஞ்சேற்றலாமே 22.
எற்றுபலதேவர்களிருக்காதிமுனிவர்கள்
ளெண்ணப்படாதகோடி
இந்திராதிதேவர்களிதர்க்கெலாமோர்முதல்
எழிற்காளகண்டதேவன்
தோற்றுருபுயங்கன்நாலில்பெரிய
சூலங்கபாலமுடனே
சூதானமாகமேல்மீதானமட்டும்
துடர்ந்தருளக்காவலாகி
எற்றிநிற்குமிதுவுமன்றியேஅந்திடத்
தெவ்விதத்தவமாகினும்
இயறறிடுகிலொன்றுபத்தாகிமுழுதும்பலித்
திறைவடிவமாகுமென்றுஞ்
சாற்றுமறையாதிநூலாற்பெரியராதலாற்
சந்துஸ்ட்டியாகியென்று
சடமிறந்தாலுமிங்கேகொண்டுசெல்லத்
தழைத்தமர்திருக்காசியே 3.

ஆதலாலும்பெரியவாகமபுராணவை
நிகமுதலளவற்றதோர்
யாவினிலுமேயிதனையேபெரியதென்றுமரன்
மரன்றிருக்கையிலையொத்த
நீதமுளதென்றுமிங்கேவருகாள்மிகவுஞ்
செம்பவும்செல்லுமென்றும்

நினைவினிற்காசியென்றோர்தரமுரைத்திடில்
நீசமுதலேனையோர்க்கும்
வாதனைதவிர்த்தருளுமாதிபரமேஸ்வரன்
வந்துசெவியினிலூதியே
வஸத்துடன்சேர்த்தருள்வரென்றனையிலும்யந்
திர னவனையிடியகரமென்றும்
வேதமுடிவும்பெரியநாதமுடிவுமுச்சி
மேவுமுடிவும்ரண்டிதள்
மேலுமொருகுணமதாயறிவுனுக்காதார
மேலையூரிக்காசியே 24.

மேலையூரிககேகுமோர்விந்தினுக்காதார
விரிசந்திரசூரியரொலாம்
வீசிவிடவலமெனத்தண்டஞ்சமர்ப்பித்து
மேலெனவிளங்குதிருவூர்
வாலையெனுமம்பிகைபெண்டனைதலையிலே
வைத்தபரமேசரருளால்
மற்றுமுளசித்தரும்முத்தருங்கூடியே
வாழ்த்தித்துதிக்கின்றவூர்
ஆலையைப்போன்றவூர்யாலைக்கரும்பதெனு
மம்மதியையுள்ளமர்த்தி
ஆட்டுமோர்யாதோசக்கையுமிலாதவூர்
அமுர்தக்குழம்புகொண்டு
பாலனைப்போலாக்கும்மேலெனுங்காலனை
பதைத்துத்தடிந்தபுலியூர்

பரஞானதநின்னங்குழற்சங்குகிண்கிணி
பரவுகாசிப்பதியிதே 25.

அவதாரிகை.

நாவினால்லுரைத்திட்டவிதங்களில்
மேவியன்னிலைதன்னிலமர்ந்தென்றும்
சாவிலாதருட்டன்னருளைக்கொளும்
நீவிரின்னம்நிசமிதைக்கேள்மினோ

---

பூரணசொரூபமாயெப்
புரத்தினுமுள்ளும்நின்று
காரணதேகம்பெற்றுக்
கலைமதிபானுமுண்டு
நாரணன்போலுமெந்த
நாட்களுமென்னோடுற்ற
வாரணப்பொருளேனெஞ்சே
வழியுனக்கறிவிப்போரே

செம்பொருளாகிவஸ்த்தின்
திருவடிநிழல்கீழுற்று
அயபலத்தமுதமுண்டு
வழிவருத்தேகமாகி
எம்முடனிருந்தானந்தத்
தெய்தியிவ்வண்டமெல்லாம்
தம்வயப்படுத்தும்நெஞ்சே
சாற்றுவதிதையுங்கேள்மோ 3.

உடலமாய்சிதம்பரகாசத்
தொளியினைக்கண்டானந்தத்
தபமதிலிலங்குமிக்கச்
சன்னதியாவுங்கண்டு
சபமெனுமெம்மன்வாழ்கண்டத்
தருகினில்மதியஞ்சிந்தி
தபனனைல்சாகாய்நின்றோய்
தனித்திதைச்சாற்றுவோமே 3.

கைக்குள்ளதாகவென்னைக்
கண்டமின்நெய்க்காத்து
வைப்புமாடதனிற்றேனே
வந்திடும்நெய்யென்றெண்ணி
பொய்த்திருகால்மாடொன்றை
புல்லெனுங்ழைமேலிட்டு
மேய்த்திடலொற்றநெஞ்சே
மேலுனக்குளைப்பதாமே 4.

ஊரகத்தினிலம்மாடும்
ஓட்டில்கள்ளர்சோரம்
நீரகத்தடைப்போமென்றால்
நில்லாதகுளிரின்சாரம்
வேரகத்தொருபக்கத்தே
விட்டுயோபிடைப்பமென்றால்
பேரகப்பட்டியன்றி
பின்வாதிதவுங்கேண்மோ 5.

வராததுவந்ததேனும்
வருபலநோய்கட்கெல்லாம்
தாரதரம்பார்க்கவேண்டும்
சகாயமக்குனக்கேவேண்டும்
பொருமையாலரசன்கோபம்
பூதலமதைப்போலொக்கும்
நிராதரமன்றிநிற்கும்
நிவர்த்திடலெப்பாங்கே 6.

ஆதாலச்சித்தராசன்
அக்கிரமந்தன்றனல்ப்பின்னும்
வாதனையிருகால்மாட்டை
வளர்ப்பதர்க்கொவ்வாதாலே
நீதனியாதலாலும்
நினக்குவேண்டுவநெய்யாலும்
சாதனநிதமென்ற
தலத்திடைவருகுவாயே 7.

வந்திடிலுனக்கென்னேரம்
வயர்பசிவந்ததாகில்
இந்திரநதிகாரத்தால்
இங்கொருகாமதேனுண்
டந்தரந்தனிலெவ்வாறே
அறிகிலோமென்றுயாகில்
சந்திரன்றயவினாலே
சமைப்பதுசாற்றுவோமே 8.

பூதலத்தெவரேயேனும்
யுண்ணியந்தியானம்ஓமம்
வேதகுயோகம்ஞானம்
வீடடைவனபல்வித்தில்
சாதனையுடையோரெல்லாம்
தழைப்பர்விண்ணுலகிலென்றும்
வேதஞன்மறையுமற்ற
மெய்யுரைப்பலவுங்சேளே 9.

பாற்கடலுக்குள்ளம்மாலும்
பள்ளிகொண்டிருந்தாலுந்தன்
சீர்த்தியால்த்தலைதுலோகர்
தேவலோகத்துக்கப்பால்
பேர்ப்படுத்திருவைகுந்த
பிரமலோகங்களென்று
சேப்படுமொவ்வொன்றுக்கும்
நிலைபலவெவ்வேருமே 10.

வெவ்வினையெனும்பல்பாச
விருட்டினுக்கொளிபோலெந்தன்
திவ்வியமனமேயென்சொற்
சிறிதனுந்தவறிடாமல்
பவ்வியமாகக்கொண்டு
பகர்ந்தவின்னிலைபெருமல்
செவ்வையாய்யிருப்பதென்ருல்
சித்தநீயாவதாமே 11

அவதாரிகை

ஆதிமூலமருண்மூலமென்றிடும்
நீதியும்மதன்நிலையந்தன்னையும்
சோதியாயருள்தோன்றயிடமதும்
ஓதியும்மனத்தோடுமுரைப்பதே.

சாற்றியவர்க்கிணைவரையுள்ளுறுதராத
தன்மைதனைபின்னமென்தெரிசித்தோர்க்கே
தோற்றுமறுட்பக்தியெனுங்கிரியைமார்க்கம்
சொன்னம்மறைகளிதனையன்றித்துணிவுறுமல்
மூர்த்திதரிசனம்வாக்கேமுன்னேசொன்ன
முறைசரியைகிரியையெனும்யோகமூன்றாய்
ஏற்றுவதுலகியல்பேயரிக்தோர்காண்பார்
இதனுறவுமுள்ளநிலைக்கியல்புராதே (1).

இபல்புராதாகினுமிச்சாதனங்கள்
இனிப்பிரக்குப்பிஸ்டைசனக்கின்பம்நல்கி
மயலெனும்பலதிமையகற்றுமாதலாலே
மனமேகம்டிதுதனிலேமயங்கிடாமல்
செய்குதமிருக்குமிடத்தாசைவைத்துச்
சிந்தைதமனமதான்றாகிதெரிசித்தாக்கால்
வியனுலகோர்மூதற்பலரும்விளங்குமேற்பின்
விண்ணிலொருதீபமெனவிளங்கும்பாரோ (2).

தீபமதுபோற்றோன்றிச்சோதிமலையாகி
திருநாதம்போலுதித்தன்னடுவேநின்ற
நாபியகத்தினிலொளிறும்யொழியைப்போலாய்
நல்[illegible]வேடனபிம்பாதத்தை

நீபயிலுந்தரமுளதோமறைகளந்தோ
நிலையதுவோயிதுவோவென்றலைந்தபின்னுஞ்
சோகமுறவனைடினங்கள்மதவுண்டாற்போற்
சொலக்கரியாவஃதன் முடிவின்றுடர்ச்சியந்தோ (3)

துடர்ச்சியதாய் தொடர்ந்தோர்க்கே யெல்லாமெய்தும்
சொல்வரொவரன்னிலைஞ் சழித்திதன்னில்
யிடத்திருந்ததெவ்விதமோவதுபோற்னேன்று
மென்றுறுமதர்க்கிதர்க்கு மணந்தபேதம்
நடத்தியதுவாய்சேர்க்கும் யிதுவோவன்றி
நாம்நடத்திககொடுபோதவிதுவாமிக்கன்
சடத்தில்வருபயன்சிறிதிதர்க்கோயில்லை
ததாகாரமாய்நிறையுஞ்சாட்சியாமே (4)

மேல்விளங்குமாதாரமாரிலையுங்கண்டு
விந்துவதேசொந்தமனையாகிவாழ்ந்து
கோலமுள்ளகம்பமதிலேலதினமுமேறி
குளிர்மதியத்தமுதமதால்கூட்ளியாதாகி
ஆலவிஷமாகியசங்கினிர்கபத்தைமாற்றி
ஆராரின்மேலிருந்தவதிசெயங்கண்டிடுவோர்
தாலமதோடொத்திடினுமல்லதுமேதுரவிற்
சார்ந்தாலும்விந்துவிலிற்றழைப்பர்தாமே (5)

விந்துதரிசனமாகிகம்பத்தேறி
விளைத்தமயல்சத்திகளைவெருட்டிப்பின்பு
இந்துகதிசொன்னடிக்குமியல்பைக்காண

எண்ணிரந்தவாந்தியங்களங்கேசேட்கும்
அந்தவிதமுமுணர்ந்தங்கப்பால்சொல்ல
அருட்பிரணவமதெனுஞ்சங்கின்மையயம்
முந்துசிறுதமரிரண்டிர்ச்செல்லும்போது
முழங்குந்தொனிக்கடலதெனமுழங்குமன்றே (6)

பார்த்தந்நமுன்பாரின்பயன்புமுதுமுணர்ந்து
பரமானந்தப்பொருளைப்படவேண்டில்
சேர்த்தந்தவிந்துவதேசாக்கிரம்போலாகும்
திரும்பவருபிரணவத்தின்செயலதுசொற்டனம்போல்
ஆர்த்ததன்மேல்பிரம்மநிலைசுழுப்தியதற்கிணையதாம்
அதன்மேலப்பனாமேயாளியுந்துரியமதற்கொக்கும்
நீர்த்தந்தபரமவெளியேதுரியாதீதம்
நினைவுடனிங்கித்தனைக்குமிருப்பதுவும்பரனே (7)

பரன்முதலிவ்வாரியல்புபகுத்துணாக்கவேண்டிற்
பரமானந்தப்பொருணம்பங்கினிலேநிற்க
திரமெவருக்கெமங்குமிலைவானமதிலேதான்
செழுமதியைப்பாரெனவொன்றைத்தாண்டிக்காட்டும்
நிரமதுபோலாகுமன்றிநித்தியாநந்தத்தின்
நிட்சயத்தையுரைப்பதேயுரைப்பதெவர்நீடுலகிலர்தோ
இரவுபகல்சுகதுக்கமேதுமிலாமோனத்
தெழுந்தசுகமேயறியுமிதையுமுணர்குகவே (8)

உணர்வதெனகண்ணிரண்டினடுவேயுட்பூட்டின்
றுருப்பதெனுமுன்னுருக்கினப்பால்செல்ல

குணமறியாயனமேனின்னுசிக்கும்சேர்
குறிப்புணரச்சக்தியாற்றேய்நீபோமூலத்
தணலிலமிழ்ந்துருவாவாய்வீணைவுன்றன்
யேறன்னிணைப்பிங்கினுஞ்சடையுறுமல்
பணைஞ்செறியும்விந்துபராநாதத்துள்ளே
மனமடங்கச்சினமடங்கமாண்டுபோமே (9)

போவதுமெய்யென்றிடினும்பழக்கமன்றிப்
புகுதவெவர்க்கெங்குமிலைப்புனிதமாக
ஆவதுமெய்யென்றிடினுமுனையல்லாமல்
வியாவொமக்கிங்குறியவறேவாதலாலே
சாவதுமெய்யென்றிடினும்மன்னுள்மட்டிற்
சமாதிதனிற்றங்கிடிலோதழைத்தேவிண்ணில்
மேவுதுமெய்யாதலினாலுனக்கிவ்வாறு
விரிக்குகின்றேனிதன்விபரம்பிரிக்கின்றேனே (10)

பிரித்துரைத்திவ்வத்துவிதானந்தத்துள்ளே
பின்படலமைந்துளிதிற்பெரியமோனம்
விரித்துரைத்தசெய்யுளொருநூற்றுக்குள்ளே
விளங்குபவர்க்கிதுவொன்றேமேலாம்வீட்டை
குறித்துரைக்கும்மற்றதற்குளிதன்றன்கூறுங்
குணகுணமும்பக்குவரின்குணங்களெல்லாம்
தெரித்துரைக்குஞ்செய்யுளினாயிரத்துக்குள்ளே
திருநடனச்சிலம்பொலியும்தெளிந்துமுற்றே.

முதற்படலம்.

திருமுடிக்காப்பு

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# சங்கரா நந்தக்களிப்பு.

---

சங்கர சங்கர சம்பு சிவ சங்கர சங்கர சங்கர சம்பு சங்கர சங்கர சம்பு.

1. பற்பலயோனிசுழன்றே பரி நாமரூபம் பெருமிச்சகதைச் - சொற்பனமாகவறிந்து - துணை யாம்பதத்தை யுணர்ந்திடவேண்டி - நற்கலையாகமங்கூறும்னவைதயற்ற சொல்லைக்களிப்பெனப்பாட கற்பக வாரணன்முன்னோன் - கணபதியேயென்னைக்காத்தருள்வாயே (சங்கர சங்கர சம்பு.)

2. மூலாதாரத்தினூடேமுக்கோண முற்றசுழியைத்திரந்தே காலாலங்கியைமூட்டி கலைமாமதியைக் கலந்துள்ளுருக்கி பாலாவின்னமுதுண்டு பத்மாசனத் திலபணைநடங்கண்டுமாலாமுச்சிவெளிக்கே மலர்ச் சோதி திகண்டு மகிழ்ந்திருந்தோமே சங்கர (சங்கர சங்கர.)

3. ரீங்காக்கறவிகரண - ந்தன்னை-நிற்கும்நிலைக் கேசிறுத்தியுடன்போய் ஆங்காரக்கூடமிடித்து அசை வற்றகுண்டலிதாளைத்திறந்து-ஒங்கார கம்பத்துளேறி வுயர்சிற்பரத்திலுலாவும் பொருளைதாங்காமற்றூங்கிநின்றுமே சிவ சற்குருபாதந்தனையடைந்தோமே. (௪)

4. அஞ்சுபதமுமகன்றேயதி - லாதாரமாறுங்க டந்ததர்க்கப்பால் மிஞசியவாசியிலேறி விரகாயச்சுழி முனைதன்னைத்திறந்தேதுஞ்சிய குண்டலிதன்னைத்து யிலாதெழுப்பிபரவெளியூடே கஞ்சமலரின்பொருளை நித்தங்காணுமற்கண்டுகளித்திருந்தோமே (சங்கர)

5. கும்பகரோசனைத்தன்னுல்வரு - கொல்லன் றுருத்திதனக்கிணையாகவம்பி லமூர்தியவென்னைஐய ன்வா சியைத்தந்துமலரடிகாட்டியம்பியெனைத்துணை யேற்றியறிவுற்றசிற்பனாக்குள்ளாகக்கூட்டிப் பம்புப வக்கடல்நீக்கி பரமானந்தகடல்பற்றி நின்றேமே (ச)

6. அட்டாங்கயோகமுங்காட்டிய வயோகமெ ன்றேயறிஉடன்கூட்டித்திட்டாந்தசிவனைக் கொ ண் டேவய்யன்சேரப்பதத்தில்செலுத்திவிட்டாண்டி கெ ட்டேனதிசைமொன்று வக்கிரிகைக்குள்நின் றுகிலே சப்படாமல்தட்டாமற்றன ஞெளிக்குள்ளேதடையற் றவானந்தமெய்திநின்றேமே. (சங்கர)

7. ஆராரின்செய்கையகன்றே யதிலய்ந்துமலமு மவத்தையுமாற்றிவீறுர்குணங்களைவிட்டே வினையா ய்கோசங்களைந்துமகன்றே பேறுர்சிவானந்தத்தூடேஅ ய்யன்பேச்சரவைத்துப்பிணையும்விழிகள்சேருதருட்கா வல்செய்தகுருதேசிகன்சித்தார்தஞ்செப்பவொண்ணு தே (சங்கர சங்கர சம்பு.)

8. வாதங்கள்பேசுஞ் சமயம் மலபந்தரதம்முடன்வாய்திறவாதே போதங்கடந்தபொருள் தான்பரிபூரணந்தன்னைபிதுவென்னயிருத்தி வேதங்கள் நாலுமரியாவெறும்பாழிதென்னுமுபடணிடதங்கள் பேதமபேதமுமற்றபெரிதானந்தக்சுடல்பெற்றநின்றேமே(சங்கர)

9. குப்பாயமேவியிருந்தே குணாதீதமாகிய மெய்பொருள்தானே முப்பாழ்கடந்த முதற்று ணிதுமூலமதென்றுமுறையிடும் வேதம் - தப்பாது சத்யஞ் சொன்னோம் இதுதன்னையே நீயெனசார்ந்து நில்லென்றான் - பொய்ப்பாலர் நெஞ்சம்புகார்தான் பரிபூரணந் தெரிசற்குருநாதன். (சங்கர)

10. பண்டையிருவினை தன்னால் பலகோடிஜென்மப்படுகுழிகாட்டுந் - தண்டலிற்சஞ்சிதமாற்றிமிகு - சடகூதமையத்தினறடைகளறுத்தே விண்டிடுமீதானந் தன்னால் - அருள்மே வியசிவபரத்தையுங்காட்டிகொண்டவறிவைக்குறித்தே குறியாகவைத்தானேயென்குருநாதன். (சங்கர)

11. நால்வகைபந்தப்படுத்தி நலமாக்கிய யேழ்வகைசென்மத்துழன்றே மால்தருமாணவந்தன்னால் வருயோனிதோறுமயங்கியவென்னை நூல்தரும்பொய்யறிவுள்ளேநுழையாமல்மெய்யறிவுள்ளேயிருத்தி - பால்தோரும்பார்த்திடமெங்கும்பரமாகவைத்தானே யென்குருநாதன் (சங்கர)

12. ஆதாராமாறுங் கடந்தேயதிலுள்ளசகுண மனத்தையுங்கண்டு போதாருநிற்குணமேவிப்பொலிவு ற்றகாண்டவபபோதம்மறுதே - மீதானமென்னும்வெ ளியில்வெறும் வெட்டவெளியாய்மெய்ப்பொருள் தா னேநீதானேனநிலைகாட்டி நிசமுற்றவானந்தநேர்மை தந்தானே (சங்கர)

13. சுத்துஞ்சமையத்துழன்றே கலைகற்று நின் றுகருத்தழியாதேசத்துமசத்துமுணர்த்திசதசத்தையும் தன்னுருவாமெனக்காட்டி சித்தஞ்சிவத்துடன்கூட்டி அய்யன்சேரச்சிவமாய்தெரிசனை தந்தேமத்தனெனப்ப லர்பேசமத்தாகியெங்கும்மகிழ்ந்திருந்தோமே. (சங்)

14. நித்தியாநித்தியங்கண்டோர்நிலைநின்றசொ ல்லினிலைவுதெரிந்தே - சத்தியஞ்சத்தியஞ் சொன் னேமிது சங்கரானந்த களிப்பாமிதனை - சித்தந்தெளி ந்துணர்வோர்கள் சிவயோகமுக்கியசிவபரங்கண்டுஅ த்துவிதத்தையடைந்தோ அளவற்றவானந்தமெய்துவி ற்பாரோ (சங்கர)

15. குருகைநகர்ப்பதிவாழுங் குணமேமிகுஞா னசித்தனுருரைத்த அருட்பெரும்மெய்மொழிதன்னை மிகவன்புடன்கண்டுவுள்ளின்புறநின்றால் இருட்டறு பாசங்களெல்லாம் யிரவியைக்கண்டபனிப்போலொழி ந்தேபொருட் பெறுசின்மயமாகி யிப்புவியெலாம்வாழ் த்தும்பனிசஞவாரே (சங்கர)

16. ஆதியிற்பாஸ்க்கரமென்ற வருள்பெற்றவாயிரத்த ருத்தமுணர்ந்து பாதியையுமகத்தாக்கி பகர்கலைஞானப் பயனையுணர்ந்தே நீதியிற்கூடநிலைத்துநிலையுற்றஅத்வை தானந்தமதென்னும்சோதியுட்சோதியுணர்ந்து சொரூ பாதீதபொருளாகிநிற்பாரே. (சங்கர)

ஆகபதிகம்யேழுக்குவிருத்தம் 97
அவதாரிகையேழுக்கு
ஆனந்தக்களிப்புபதினாறு
ஆகமொத்தம்செய்யுள் 120.



## வெண்பா.



எங்கும்நிறைந்ததேயிருக்குமேதமிலாசித்தர்குழாம்
தங்குதிருக்குருகையினுடடோற்ருதா—இங்கே
சித்தர்களும்வந்தெமக்குச்செப்பராவய்யோகோ
இத்தலத்திலேழைமுனமிப்ப.



பொதிகாசலம்புலவன்
பூங்கழல்கள்வாழ்க.

ஆனந்தகளிப்பு முற்றிற்று.